# ॥ आनन्दलहरी ॥

# ஆனந்தலஹரீ

(1)

भवानि स्तोतुं त्वां प्रभवति चतुर्भिर्न वदनैः
प्रजानामीशानस्त्रिपुरमथनः पञ्चभिरपि ।
न षड्भिः सेनानीर्दशशतमुखैरप्यहिपति –
स्तदान्येषां केषां कथय कथमस्मिन्नवसरः ॥

பவாநி ஸ்தோதும் த்வாம் ப்ரபவதி சதுர்பிர்ந வதனை:
ப்ரஜாநாமீசான: த்ரிபுரமதன: பஞ்சபிரபி ।
ந ஷட்பி: ஸேநாநீ: தசசதமுகை ரப்யஹிபதி:
ததாऽன்யேஷாம் கேஷாம் கதய கதமஸ்மின்
அவஸர: ॥

*ஹே பவாநி! உன்னை ஸ்தோத்ரம் செய்ய பிரம்மதேவன் நான்கு முகங்களாலும் முயற்சித்து முடியவில்லை. த்ரிபுரம் எரித்த பரமேச்வரன் தனது ஐந்து முகங்களாலும் முடியவில்லை. சுப்ரமண்யர் தனது ஆறுமுகங்களாலும் முயன்று முடியவில்லை. ஏன்? ஆதிசேஷன் ஆயிரம் முகங்களாலுமே முடியவில்லை என்றபொழுது, பிறகு இவ்விஷயத்தில் வேறு எவருக்குத் தான் அவகாசமுள்ளது?*

(2)

घृतक्षीरद्राक्षा मधुमधुरिमा कैरपि पदै–
र्विशिष्यानाख्येयोभवति रसनामात्रविषयः ।
तथा ते सौन्दर्यं परमशिवदृङ्मात्रविषयः
कथंकारं ब्रूमः सकलनिगमागोचरगुणे ॥

க்ருதக்ஷீரத்ராக்ஷா மதுமதுரிமா கைரபி பதை:
விசிஷ்யாநாக்யேயோ பவதி ரஸநாமாத்ரவிஷய: ।
ததா தே ஸௌந்தர்யம் பரமசிவத்ருங்மாத்ரவிஷய:
கதங்காரம் ப்ரூம: ஸகலநிகமாகோசரகுணே ॥

நெய், பால், திராக்ஷை, தேன் இவற்றின் இனிமை இவை ஒரு சில வார்த்தைகளால் சிறப்பித்துக் கூற இயலாது; அது சுவைக் கும் நாக்கிற்கு மட்டுமே இலக்கானது, அதுபோல, ஹே தேவி! வேதங்களனைத்திற்குமே எட்டாத குணங்கள் உடையவள் நீ, உனது அழகு என்பது பரமசிவன் ஒருவர் கண்ணுக்கு மட்டுமே இலக்கானது. ஆகவே நான் எப்படி சொல்ல முடியும்?

(3)

मुखे ते ताम्बूलं नयनयुगले कज्जलकला
ललाटे काश्मीरं विलसति गले मौक्तिकलता।
स्फुरत्काञ्चीशाटी पृथुकटितटे हाटकमयी
भजामि त्वां गौरीं नगपतिकिशोरीमविरतम्॥

முகே தே தாம்பூலம் நயனயுகலே கஜ்ஜலகலா
லலாடே காச்மீரம் விலஸதி கலே மௌக்திகலதா।
ஸ்புரத்காஞ்சீ சாடீ ப்ருகடிதடே ஹாடகமயீ
பஜாமி த்வாம் கௌரீம் நகபதி கிசோரீமவிரதம்॥

உனது வாயில் தாம்பூலமும், இரு கண்களிலும் மையெழுத்தும், நெற்றியில் கஸ்தூரிதிலகமும்; கழுத்தில் முத்துமாலையும் விளங்குகிறது. உனது இடையில் தளதளக்கும் ஒட்டியானத்துடன் தங்கமயமான வஸ்திரம் பிரகாசிக்கிறது. மலையரசன் மகளான உன்னை எப்பொழுதும் சேவிக்கிறேன்.

(4)

विराजन्मन्दारद्रुमकुसुमहारस्तनतटी –
नदद्वीणानादश्रवणविलसत्कुण्डलगुणा।
नताङ्गी मातङ्गी रुचिरगतिभङ्गी भगवती
सती शंभोरम्भोरुहचटुल चक्षुर्विजयते॥

விராஜன் மந்தாரத்ருமகுஸும ஹாரஸ்தனதடீ
நதத்வீணா நாதச்ரவண விலஸத்குண்டலகுணா ।
நதாங்கீ மாதங்கீ ருசிர கதிபங்கீ பகவதீ
ஸதீ சம்போரம்போருஹசடுலசக்ஷுர் விஜயதே ॥

அன்னையின் மார்பில் மந்தார புஷ்பமாலை விளங்குகிறது. வீணையின் நாதம் கேட்டு மகிழும் அன்னையில் காதுகளில் குண்டலம் பளிச்சிடுகிறது. மதங்கரின் மகளான அம்பாள் அழகிய நடையும், துவண்ட அகங்கமும் கொண்டவள். தாமரை இதழ் போன்ற குறுகுறுப்பான கண்ணுடன் இதோ பரமேச்வரன் அகமுடையாள் விளங்குகிறாளே!

(5)

नवीनार्कभ्राजन्मणिकनकभूषापरिकरै -
वृताङ्गी सारङ्गीरुचिरनयनाङ्गीकृतशिवा ।
तटित्पीता पीताम्बरललितमञ्जीरसुभगा
ममापर्णा पूर्णा निरवधिसुखैरस्तु सुमुखी ॥

நவீநார்கப்ராஜன் மணிகநக பூஷாபரிகரை:
வ்ருதாங்கீ ஸாரங்கீருசிரநயனாங்கீ க்ருதசிவா ।
தடித்பீதா பீதாம்பரலலித மஞ்ஜீரஸுபகா
மமாபர்ணா பூர்ணா நிரவதிஸுகை ரஸ்து ஸுமுகீ ॥

அபர்ணை பார்வதீ, இளம் சூர்யன் போல் விளங்கும் வைரம், தங்கம் இவற்றாலான நகைகள் பூட்டப்பட்டவளாய், பெண் மான் கண்கள் போன்ற கண்களால் ஈர்க்கப்பட்ட சிவனையுடையவளாய், மின்னல் போல் மேனியளாய், பீதாம்பரத்தின் மேல் அழகிய ஒட்டியாணமணிந்தவளாய் எல்லா ஸௌபாக்யங்களும் நிரம்பி எனக்கு ப்ரஸன்னையாக இருக்கட்டும்.

(6)

हिमाद्रेः संभूता सुललितकरैः पल्लवयुता
सुपुष्पा मुक्ताभिर्भ्रमरकलिता चालकभरैः।
कृतस्थाणुस्थाना कुचफलनता सूक्तिसरसा
रुजां हन्त्री गन्त्री विलसति चिदानन्दलतिका ॥

ஹிமாத்ரே: ஸம்பூதா ஸுலலிதகரை: பல்லவயுதா
ஸுபுஷ்பா முக்தாபி: ப்ரமரயுதா சாலகபரை: ।
க்ருதஸ்தாணு ஸ்தாநா குசபல நதா ஸூக்திஸரஸா
ருஜாம் ஹந்த்ரீ கந்த்ரீ விலஸதி சிதானந்தலதிகா ॥

நோயைப் போக்கும் நடமாடும் சித் - ஆனந்தமென்ற ஒரு கொடி விளங்குகிறதே, அது ஹிமய மலையில் தோன்றி, மென்மையான கைகொண்டிருப்பதால் துளிரோடும், முத்துமாலைகள் உடையதாகையால் புஷ்பங்களோடும், கருங்கூந்தல்கள் இருப்பதால் வண்டுகளோடும், ஸ்தாணு என்ற படரும் கம்போடும், மார்பகங்களாகிய பழம் இருப்பதால் சற்று சாய்ந்தும், நல்ல பேச்சால் சாறு கொண்டும் மிளிர்கிறது.

(7)

सपर्णामाकीर्णां कतिपयगुणैः सादरमिह
श्रयन्त्यन्ये वल्लीं मम तु मतिरेवं विलसति।
अपर्णैका सेव्या जगति सकलैर्यत्परिवृतः
पुराणोऽपि स्थाणुः फलति किल कैवल्यपदवीम् ॥

ஸபர்ணாமாகீர்ணாம் கதிபயகுணை: ஸாதரமிஹ
ஶ்ரீயந்த்யந்யே வல்லீம் மம து மதிரேவம் விலஸதி।
அபர்ணைகா ஸேவ்யா ஜகதி ஸக லைர்யத்பரிவ்ருத:
புராணோऽபி ஸ்தாணு: பலதி கில கைவல்யபதவீம்॥

அடர்ந்த இலைகளும், வேறுசில குணங்களும் நிரம்பிய தால் ஒரு கொடியை பரிவுடன் நாடுவதுண்டு. ஆனால் என்னைக் கேட்டால், யாவரும் நாட வேண்டியது 'அபர்ணா' (இலை யில்லாத) என்ற கொடிதான். ஏனெனில் அது சுற்றியுள்ளதாலே யல்லவா பழைய ஒரு 'ஸ்தாணு' (மரம் கூட) கைவல்யம் என்ற ஒன்றை காய்க்கிறது.

(8)

विधात्री धर्माणां त्वमसि सकलाम्नायजननी
त्वमर्थानां मूलं धनदनमनीयांघ्रिकमले ।
त्वमादिः कामानां जननि कृतकन्दर्पविजये
सतां मुक्तेर्बीजं त्वमसि परमब्रह्ममहिषि ॥

விதாத்ரீ தர்மாணாம் த்வமஸி ஸகலாம்நாயஜநநீ
த்வமர்த்தாநாம் மூலம் தநதநம நீயாங்க்ரிகமலே ।
த்வமாதி: காமாநாம் ஜநநி க்ருத கந்தர்ப விஜயே
ஸதாம் முக்தேர்பீஜம் த்வமஸி பரம ப்ரஹ்மமஹிஷி ॥

ஹேதேவி! நீ தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் என்ற நான்கு புருஷார்தங்களையும் பயக்க வல்லவள். எல்லா வேதங் களையும் தோற்றுவித்து தர்மங்களைச் செய்ய ஹேதுவாகிறாய். நீயே பொருள் அனைத்திற்கும் ஆணிவேர். நீ குபேரன் வணங்கும் திருவடித் தாமரை படைத்தவளன்றோ. நீயே காமங்களுக்கும் முதல்வர். ஹே தாயே! நீதானே மன்மதனை வெற்றி கொள்ளச் செய்தாய். பரம்பொருளின் பட்டமஹிஷியாய் இருந்து மோக்ஷத் திற்கும் மூலகாரணமாக இருக்கிறாய்.

(9)

प्रभूता भक्तिस्ते यदपि न ममालोलमनस-
स्त्वया तु श्रीमत्या सदयमवलोक्योऽहमधुना ।
पयोदः पानीयं दिशति मधुरं चातकमुखे
भृशं शङ्के कैर्वा विधिभिरनु नीता मम मतिः ॥

ப்ரபூதா பக்திஸ்தே யதபி ந மமாலோலமனஸ:
த்வயா து ஸ்ரீமத்யா ஸதயமவலோக்யோऽஹமதுநா।
பயோத: பாநீயம் திசதி மதுரம் சாதகமுகே
ப்ருசம் சங்கே கைர்வா விதிபிரநுநீதா மம மதி:॥

ஊசலாடும் மனதுடைய எனக்கு பக்தியில்லையெனினும், உனக்குத்தான் எவ்வளவு பாசம் பற்று? ஆகவே நீதான் நல்லவள், என்னை கவனித்துக்கொள். சாதகப்பறவையின் வாயில் இனிய தண்ணீரை மேகம் பொழிகிறதே! என்னை முறையாக வேறு யார் அரவணைத்துள்ளார் என்று சந்தேஹமாகத்தான் உள்ளது.

**(10)**

कृपापाङ्गालोकं वितर तरसा साधुचरिते
न ते युक्तोपेक्षा मयि शरणदीक्षामुपगते ।
न चेदिष्टं दद्यादनुपदमहो कल्पलतिका
विशेषः सामान्यैः कथमितरवल्लीपरिकरैः ॥

க்ருபாபாங்காலோகம் விதர தரஸா ஸாதுசரிதை:
ந தே யுக்தோபேக்ஷா மயிசரண தீக்ஷாமுபகதே।
நதேதிஷ்டம் தத்யா தனுபதமஹோ கல்பலதிகா
விசேஷ: ஸாமாந்யை: கதமிதரவல்லீபரிகரை:॥

நல்லதொரு சரிதம் படைத்த தேவியே! சீக்ரம் என் மேல் கடைக்கண் பார்வையை செலுத்தி விடு. சரணம் என்ற தீக்ஷை பெற்ற என்னிடம் ஏன் இந்த பாராமுகம் உனக்கு? கற்பகக் கொடி வேண்டியவற்றைக் கொடுக்கவில்லையெனில் மற்ற சாதாரண கொடிகளை விட அதன் விசேஷம்தான் என்ன?

**(11)**

महान्तं विश्वासं तव चरणपङ्केरुहयुगे
निधायान्यन्नैवाश्रितमिह मया दैवतमुमे ।
तथापि त्वच्चेतो यदि मयि न जायेत सदयं
निरालम्बो लम्बोदरजननि कं यामि शरणम् ॥

மஹாந்தம் விச்வாஸம் தவ சரணபங்கேருஹயுகே
நிதாயாந்யத் நைவாச்ரிதமிஹ மயா தைவதமுமே ।
ததாபி த்வச்சேதோ யதி மயி ந ஜாயேத ஸதயம்
நிராலம்போ லம்போதரஜநநி கம் யாமி சரணம் ॥

ஹே உமையே! உன் திருவடித் தாமரையின் மீது வெகுவாக நம்பிக்கை வைத்து, வேறு தெய்வங்களை நான் நாடியதில்லை. இருந்தும், என் மீது இரக்கம் கொள்ளவில்லையெனில் ஊன்றுகோல் இன்றி இனி யாரை சரணமடைய முடியும்? நீ லம்போதரன்தாயன்றோ! (என் தாயும் நீதானே!)

**(12)**

अयःस्पर्शे लग्नं सपदि लभते हेमपदवीं
यथारथ्यापाथः शुचि भवति गङ्गौघमिलितम् ।
तथा तत्तत्पापैरतिमलिनमन्तर्मम यदि
त्वयि प्रेम्णा सक्तं कथमिव न जायेत विमलम् ॥

அயஸ்பர்சே லக்னம் ஸபதி லபதே ஹேமபதவீம்
யதா ரத்யாபாத: சுசி பவதி கங்கௌகமிலிதம் ।
ததா தத்தத்பாபை ரதிமலிநமந்தர்மம யதி
த்வயி ப்ரேம்ணா ஸக்தம் கதமிவ ந ஜாயேத விமலம் ॥

பரிசவேதியில் சேர்க்கப்பட்ட இரும்பு சட்டென் தங்கமாக பரிணமிக்கும், கங்கையுடன் கலந்த தெருத்தண்ணீரும் சுத்தமாகி விடும். அதுபோல், பற்பல பாபங்களால் மிகவும் கலங்கமுற்ற எனது மனமும், உன்னிடம் பக்தியுடன் சேரும்பொழுது தூயதாக ஏன் ஆகாது?

**(13)**

त्वदन्यस्मादिच्छाविषयफललाभे न नियम –
स्त्वमज्ञानामिच्छाधिकमपि समर्था वितरणे ।
इति प्राहुः प्राञ्चः कमलभवनाद्यास्त्वयिमनः (मम मनः)
स्त्वदासक्तं नक्तंदिवमुचितमीशानि कुरु तत् ॥

த்வதன்யஸ்மாத் இச்சாவிஷயபல லாபே ந நியம:
த்வமஜ்ஞானா மிச்சாதிகமபி ஸமர்த்தா விதரணே!
இதி ப்ராஹு: ப்ராஞ்ச: கமலபவநாத்யா ஸ்த்வயிமன:
த்வதாஸக்தம் நக்தந்திவ முசிதமீசாநி குரு தத் ॥

ஹே மகேச்வரி! உன்னைத்தவிர வேறு தெய்வங்களிடமிருந்து விரும்பிய பயனைப் பெறுவது நிச்சயமில்லை. நீயோ சாமான்ய ஜனங்களுக்கும் விரும்பியதை விட அதிகமாக கொடுப்பதில் வல்லவள் என பிரம்மதேவன் முதலியோர் கூறியுள்ளனர். என் மனம் எப்பொழுதும் உன்பால் நாட்டம் கொண்டுள்ளதை எண்ணி எது உசிதமோ அதை செய்வாயாக!

**(14)**

स्फुरन्नानारत्नस्फटिकमयभित्तिप्रतिफल-
त्त्वदाकारं पञ्चच्छशधरकलासौधशिखरम् ।
मुकुन्दब्रह्मेन्द्रप्रभृति परिवारं विजयते
तवागारं रम्यं त्रिभुवनमहाराजगृहिणि ॥

ஸ்புரந்நாநா ரத்னஸ்படிகமய பித்திப்ரதிபலத்
த்வதாகாரம் சஞ்சச்சசதரகலாஸௌதசிகரம் ।
முகுந்த ப்ரஹ்மேந்த்ர ப்ரப்ருதி பரிவாரம் விஜயதே
தவாகாரம் ரம்யம் த்ரிபுவன மஹாராஜக்ருஹிணி ॥

ஹே மூவுலகப் பேரரசன் மஹிஷியே! உனது திருமாளிகை, பளிச்சிடும் பல வைரக்கற்கள் பதித்த ஸ்படிகச் சுவற்றில் நிழலாடும் உன் வடிவங்கொண்டும், அசைவது போன்ற மாடியின் முகப்பு மண்டபத்தையுடையதும், விஷ்ணு, பிரம்மா, இந்த்ரன் முதலிய பரிவாரங்களை யுடையதுமாய் விளங்குகிறது.

(15)

निवासः कैलासे विधिशतमखाद्याः स्तुतिकराः
कुटुम्बं त्रैलोक्यं कृतकरपुटः सिद्धनिकरः ।
महेशः प्राणेशस्तदवनिधराधीशतनये
न ते सौभाग्यस्य क्वचिदपि मनागस्ति तुलना ॥

நிவாஸ: கைலாஸே விதிசதமகாத்யா: ஸ்துதிகரா:
குடும்பம் த்ரைலோக்யம் க்ருதகரபுட: ஸித்தநிகர:
மஹேச: ப்ராணேச: ததவநிதராதீச தநயே
நதே ஸௌபாக்ய ஸ்யஸயக்வ சிதபி மநாகஸ்தி துலநா॥

*மலையரசன் மகளே! உனது ஸௌபாக்யத்திற்கு ஓரிடத்திலாவது கொஞ்சமாவது ஈடு இணை கிடையாது. ஏனெனில் கைலாயத்தில் வாசம் செய்வதும், பிரம்மா, இந்த்ரன் முதலியோர் ஸ்துதி பாடகர்களாயிருப்பதும், மூவுலகமே குடும்பமாயிருப்பதும், ஸகல சித்திகளும் கைப்பிடிக்குள் இருப்பதும், மகேச்வரனே மணாளனாயிருப்பதும் - இவை சாமான்யமில்லையன்றோ!*

(16)

वृषो वृद्धो यानं विषमशनमाशा निवसनं
श्मशानं क्रीडाभूर्भुजगनिवहो भूषणविधिः ।
समग्रा सामग्री जगति विदितैव स्मररिपो –
र्यदेतस्यैश्वर्यं तव जननि सौभाग्यमहिमा ॥

வ்ருஷோ வ்ருத்தோ யாநம் விஷமசநம் ஆசா நிவஸநம்
ச்மசாநம் க்ரீடாபூர்புஜகநிவஹோ பூஷண விதி: ।
ஸமக்ரா ஸாமக்ரீ ஜகதி விதிதைவ ஸ்மரரியோ:
யதேதஸ் யைச்வர்யம் தவ ஜநநி ஸௌபாக்ய மஹிமா॥

கிழட்டுக்காளைதான் வாஹனம், விஷம்தான் ஆகாரம், திசைதான் உடுப்பு, சுடுகாடுதான் விளையாடுமிடம், சர்பங்கள் தான் அலங்கார ஸாதனம் - இப்படி பரமேச்வரனின் அனைத்து சொத்து வரிசையும் உலகோருக்குத் தெரிந்ததுதானே! பின், அவருக்கு இருக்கும் இறையாண்மை என்பது ஹே தாயே! உனது ஸௌபாக்யப்பேறல்லவா!

(17)

अशेषब्रह्माण्डप्रलयविधिनैसर्गिकमतिः
श्मशानेष्वासीनः कृतभसितलेपः पशुपतिः ।
दधौ कण्ठे हालाहलमखिलभूगोलकृपया
भवत्याः संगत्याः फलमिति च कल्याणि कलये ॥

அசேஷப்ரஹ்மாண்டப்ரலய விதிநைஸர்கிகமதி:
ச்மசாநேஷ் வாஸஸீந: க்ருத பஸிதலேப: பசுபதி: ।
ததௌ கண்டே ஹாலாஹலமகில பூகோலக்ருபயா
பவத்யா: ஸங்கத்யா: பலமிதி ச கல்யாணி கலயே ॥

நல்லதையே எண்ணியும் செய்தும் பழக்கமுள்ள ஹே தேவி! இந்த பசுபதியாகப்பட்டவர், அனைத்து பிரம்மாண்டத்தையும் அழித்து விடுவதை இயல்பாகக் கொண்டவர். அதற்கேற்றபடி சுடுகாட்டில் வசிப்பார்; விபூதி பூசுவார் - அத்தகையவர் அனைத்துலகின்பால் கருணையால் ஆலகால விஷத்தை தன் கழுத்தில் தங்க வைத்தாரென்றால், அது உன் உடனிருக்கையின் பயனாக நிகழ்ந்ததெனக் கருதுகிறேன்.

(18)

त्वदीयं सौन्दर्यं निरतिशयमालोक्य परया
भियैवासीद्गङ्गा जलमयतनुः शैलतनये ।
तदेतस्यास्तस्माद्वदनकमलं वीक्ष्य कृपया
प्रतिष्ठामातन्वन्निजशिरसि वासेन गिरिशः ॥

த்வதீயம் ஸௌந்தர்யம் நிரதிசயம் ஆலோக்ய பரயா
பியை வாஸீத் கங்கா ஜலமயதநு: சைலதநயே।
ததே தஸ்யாஸ் தஸ்மாத் வதன கமலம் வீக்ஷ்ய க்ருபயா
ப்ரதிஷ்டாமாத ந்வந்நிஜசிரஸி வாஸேந கிரிச:॥

ஹே பார்வதி! நிகரற்ற உனது அழகைப் பார்த்து மிகுந்த பயத்தால் போலும், கங்கை, உருகிய ஜலமயமாக ஆகிவிட்டாள்! அத்தகைய அவளது முகத்தைக் கண்டு தயவுடன் பரமேச்வரன் தனது தலையில் இருக்கச் செய்து நிலைப்படுத்தினார்!

**(19)**

विशालश्रीखण्डद्रवमृगमदाकीर्णघुसृण –
प्रसूनव्यामिश्रं भगवति तवाभ्यङ्गसलिलम्।
समादाय स्रष्टा चलितपदपांसून्निजकरैः
समाधत्ते सृष्टिं विबुधपुरपङ्केरुहदृशाम्॥

விசாலஸ்ரீ கண்ட த்ரவ ம்ருகமதாகீர்ண குஸ்ருண -
ப்ரஸூனவ்யா மிச்ரம் பகவதி தவாப் யங்கஸலிலம்।
ஸமாதாய ஸ்ரஷ்டா சலிதபத பாம்ஸூந் நிஜகரை:
ஸமாதத்தே ஸ்ருஷ்டிம் விபுதபங்கேருஹத்ருசாம்॥

கஸ்தூரி கலந்த சந்தனக் குழம்பால் மணக்கும் புஷ்பங்கள் கலந்துள்ள உனது ஸ்நானத் தண்ணீரையும் காற்றோடு பறக்கும் உன் கால் தூசுகளையும் தன் கையால் எடுத்து பிரம்மதேவ்ன் தேவலோக மங்கையரின் படைப்பை முடிவுறச் செய்கிறார் அன்றோ!

**(20)**

वसन्ते सानन्दे कुसुमितलताभिः परिवृते
स्फुरन्नानापद्मे सरसि कलहंसालिसुभगे।
सखीभिःखेलन्ती मलयपवनान्दोलितजले
स्मरेद्यस्त्वां तस्य ज्वरजनितपीडापसरति॥

வஸந்தே ஸானந்தே குஸுமிதலதாபி: பரிவ்ருதே
ஸ்புரந்நாநாபத்மே ஸரஸி கலஹம்ஸாலிஸுபகே।
ஸகீபி: கேலந்தீம் மலயபவநாந்தோலிதஜலே
ஸ்மரேத்ய ஸ்த்வாம் தஸ்ய
ஜ்வரஜநிதபீடாபஸரதி॥

மகிழ்ச்சி பொங்கும் வஸந்த காலத்தில் பூக்கொடிகள் மண்டிய, மலர்ந்த தாமரையும், அன்ன பறவைகளும் அழகூட்டும் வண்ணம் இளந்தென்றலும் வீசி அசைந்தாடும் தண்ணீர் நிரம்பிய குளத்தில் தோழியரோடு நீராடும் உன்னை தியானிப்பவருக்கு வந்த ஜ்வர பீடை நீங்கும்.

ஆனந்தலஹரீ முற்றிற்று

